[22nd August 1960

SRI S. M. ANNAMALAI: துப்பு துலக்கப்படுவது மிகவும் குறைவாக இருக்கிறதே? துப்பு துலக்குவதற்கு இங்கிருந்து ஏதாகிலும் போலீஸ் நாய்கள் அழைத்துச் செல்லப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: துப்புக் கண்டு பிடிப்பது என்பது ஒன்றும் குறைவாக இருப்பதாக நான் ஒப்புக்கொள்ளவில்லை.

*Kandamanur-Varushnad road*

*364 *Q.*—SRI A. VEDARATHNAM (on behalf of SRI N. R. THIAGARAJAN): கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) 1959-ல் மதுரை ஜில்லாவில் ஆதிவாசிகள் நலனுக்காக எத்தனை ரோடுகள் போட திட்டமிடப்பட்டன?

(ஆ) அதில் எத்தனை ரோடுகள் போடப்பட்டன?

(இ) மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுகா கண்டமனூரிலிருந்து, வருஷநாடுவரை ரோடு போடத் திட்டம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்திருந்தும் அந்த வேலை நடக்காத காரணம் என்ன?

THE HON. SRI P. KAKKAN: (*a*) Only Village Communications intended to serve villages are sanctioned and are under execution. No specific road scheme has been sanctioned for the benefit of aboriginals in Madurai district.

(*b*) Does not arise.

(*c*) There is no such proposal in the Second Five-Year Plan.

SRI V. SUBBIAH: இந்த ரோடாவது மிக வளம் பொருந்திய மணல் வளம் உள்ள வருஷநாடு மலைப் பிரதேசத்தையும் ராமநாதபுரம் ஜில்லா உத்தராயிருப்பையும் இணைக்கக்கூடியதாக இருக்கும் ரோடாகையால், அதை அம்மாதிரி இணைப்பதற்கு அரசாங்கத்தினிடம் திட்டம் இருக்கிறதா?

THE HON. SRI P. KAKKAN: கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் அது பற்றிப் பரிசீலனை செய்யலாம்.

*Inscriptions discovered in Panmozhi firka*

*365 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) தென்காசி தாலுகா பன்மொழி பிர்க்கா, குத்துக்கால் வலசை கிராமத்தில் சமீபத்தில் புராதன கல்வெட்டு கண்டு பிடிக்கப்பட்டதா?

(ஆ) கல்வெட்டு ஆராய்ச்சி நிபுணர்கள் அதைப்பற்றிக் கூறும் விவரமென்ன?

22nd August 1960]

(இ) அக் கல்வெட்டுகளை அரசாங்கம் என்ன செய்திருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes, Sir.

(b) No expert opinion has so far been obtained.

(c) The matter has been remitted to the Government Epigraphist for India, Ootacamund, for necessary action.

SRI A. VEDARATHNAM: எவ்வளவு நாட்களில் அந்த ஆராய்ச்சியாளர்களிடமிருந்து பதிலை எதிர்பார்க்கலாம் ? அந்த இடத்தில் மேலும் பரிசோதனை செய்து மேலும் புதை பொருள்கள் கிடைக்கும் சாத்தியக் கூறுகள் இருக்கின்றனவா என்பதை அரசாங்கம் கவனிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதற்கு மேல் இருக்கிறதா என்பதைப் பற்றித் தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. எவ்வளவு சீக்கிரம் அந்தப் பொருள் கிடைக்கும் என்று என்னால் இப்பொழுது சொல்ல முடியாது.

*Kadaladi Handloom Weavers' Co-operative Society*

*366 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் போளூர் தாலூகா கடலாடி கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தைப் பற்றி 10—8—1957-ல் பொது மக்களால் புகார் அனுப்பப்பட்டதா ?

(ஆ) அப்படியானால், அதன் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) The Deputy Registrar of Co-operative Societies, Vellore (South), enquired into the matter and found that the allegations were not substantiated and were without basis.

SRI S. M. ANNAMALAI: அந்த ரிப்போர்ட் 10—8—1957 அனுப்பப்பட்டு, ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் கழித்து இப்பொழுதுதான் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. அந்த சொசைட்டி ஏறத்தாழ மூன்று அல்லது நான்கு ஆண்டுகளாக சரிவர நடைபெறாமல் இருக்கிறது. அது சரிவர நடக்க இது வரையில் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government are taking action to revive the society. Allegations were made on 10th August 1957. Most of them were very frivolous and without any basis. It takes some time to collect all the material and then come to a conclusion.

SRI S. M. ANNAMALAI: இப்படிப் பல புகார்கள் அனுப்பினாலும் அதைப்பற்றி விசாரிக்க "டிபுடி ரிஜிஸ்ட்ரார்" வருவதற்கு ஏறத்தாழ இரண்டு மூன்று ஆண்டுகள் ஆகின்றன.